உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

**ஹிந்தி ராமாயணத்தில்**
**சிவஸ்தோத்ரம்**

# ॥ श्री रुद्राष्टकम् ॥

# ॥ ஸ்ரீ ருத்³ராஷ்டகம் ॥

தமிழ் உரை:
**சிவபக்தி பிரசாரமணி ஆங்கீரஸ சர்மா**

**नमामीशमीशान निर्वाणरूपं**
**विभुं व्यापकं ब्रह्म वेदस्वरूपम् ।**
**निजं निर्गुणं निर्विकल्पं निरीहं**
**चिदाकाशमाकाशवासं भजेऽहम् ॥ १ ॥**

**நமாமீஶமீஶான நிர்வாணரூபம்**
**விபு⁴ம் வ்யாபகம் ப்³ரஹ்ம வேத³ஸ்வரூபம் ।**
**நிஜம் நிர்கு³ணம் நிர்விகல்பம் நிரீஹம்**
**சிதா³காஶமாகாஶவாஸம் ப⁴ஜே(அ)ஹம் ॥ 1 ॥**

1. எல்லோருக்கும் தலைவரும், மோக்ஷ ஸ்வரூபரும், மேலானவரும், எங்கும் வியாபித்திருப்பவரும், பிரம்மஸ்வரூபரும், வேதமே உருவானவரும், ஈசானன் என்ற பெயருடையவருமான சிவபெருமானை நான் நமஸ்காரம் செய்கின்றேன். ஸத்தியவஸ்துவும், குணங்களுக்கு அப்பாற்பட்டவரும், வேறுபாடுகள் அற்றவரும், இச்சைகள் அற்றவரும் ஞானாகாய வடிவானவரும், ஆகாயத்தை ஆடையாகவுடையவருமான ஈசனை நான் பஜிக்கின்றேன். (பஜித்தல் - ஸேவைசெய்தல், வழிபடுதல்).

**निराकारमोंकारमूलं तुरीयं**
**गिराज्ञानगोतीतमीशं गिरीशम् ।**
**करालं महाकालकालं कृपालं**
**गुणागारसंसारपारं नतोऽहम् ॥ २ ॥**

**நிராகாரமோங்காரமூலம் துரீயம்**
**கி³ராஜ்ஞானகோ³தீதமீஶம் கி³ரீஶம் ।**
**கராலம் மஹாகாலகாலம் க்ருபாலம்**
**கு³ணாகா³ரஸம்ஸாரபாரம் நதோ(அ)ஹம் ॥ 2 ॥**

2. உருவமற்றவரும், பிரணவம் எனப்படும் ஓங்காரத்திற்கு மூலமானவரும், மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்ட நான்காவது மூர்த்தியும், வாக்கு - அறிவு - ஐம்புலன்கள் ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டவரும், தலைவரும், கயிலைமலையில் வசிப்பவரும், தீயோர்க்குப் பயங்கரமானவரும், காலனாகிய யமனுக்கும் காலத்தைச் செய்பவரும், தயையுடையவரும், நற்குணங்களுக்கு இருப்பிடமானவரும், பிறப் பிறப்பென்னும் ஸம்ஸாரச் சூழலுக்கு அப்பாற்பட்டவருமான ஸ்ரீ பரமேசுவரரை நான் வணங்குகின்றேன்.

**तुषाराद्रिसंकाशगौरं गभीरं**
**मनोभूतकोटिप्रभाश्रीशरीरम् ।**
**स्फुरन्मौलिकल्लोलिनी चारुगङ्गा**
**लसद्भालबालेन्दु कण्ठे भुजङ्गा ॥ ३ ॥**

**துஷாராத்³ரிஸங்காஶகௌ³ரம் க³பீ⁴ரம்**
**மனோபூ⁴தகோடிப்ரபா⁴ஶ்ரீஶரீரம் ।**
**ஸ்பு²ரன்மௌலிகல்லோலினீ சாருக³ங்கா³**
**லஸத்³பா⁴லபா³லேந்து³ கண்டே² பு⁴ஜங்கா³ ॥ 3 ॥**

3. பனிமலையாகிய இமயத்துக்கு ஒப்பான வெண்மை நிறமும் கம்பீரமும் உடையவரும், கோடிக்கணக்கான மன்மதர்களின் ஒளியும் அழகும் அமைந்த திரு மேனியை உடையவரும், அலைகளையுடைய அழகிய கங்காநதி தலையினில் விளங்க நெற்றியில் பிறைச்சந்திரனைச்சூடிக் கழுத்தில் பாம்புடன் உள்ளவருமான (ஈசனை வணங்குகின்றேன்).

**चलत्कुण्डलं शुभ्रनेत्रं विशालं**
**प्रसन्नाननं नीलकण्ठं दयालम् ।**
**मृगाधीशचर्माम्बरं मुण्डमालं**
**प्रियं शंकरं सर्वनाथं भजामि ॥ ४ ॥**

**சலத்குண்ட³லம் ஶுப்⁴ரநேத்ரம் விஶாலம்**
**ப்ரஸன்னானனம் நீலகண்ட²ம் த³யாலம் ।**
**ம்ருகா³தீ⁴ஶசர்மாம்ப³ரம் முண்ட³மாலம்**
**ப்ரியம் ஶங்கரம் ஸர்வநாத²ம் ப⁴ஜாமி ॥ 4 ॥**

4. காதுகளில் அசையும் குண்டலங்களும், அழகுபொருந்திய விசாலமான திருவிழிகளுமுடைய மகிழ்ச்சி ததும்பும் திருமுகமுடையவரும் நீலகண்டரும், கருணாமூர்த்தியும், சிம்மத்தின் தோலை ஆடையாகத் தரித்தவரும், கபாலமாலை அணிந்தவரும், அனைத்துயிர்க்கும் பிரியமானவரும், உலகிற்கு நன்மையைச் செய்ப வருமான ஸர்வேசுவரனை பஜிக்கின்றேன்.

प्रचण्डं प्रकृष्टं प्रगल्भं परेशं
अखण्डं अजं भानुकोटिप्रकाशम् ।
त्रयःशूलनिर्मूलनं शूलपाणिं
भजेऽहं भवानीपतिं भावगम्यम् ॥ ५ ॥

ப்ரசண்ட³ம் ப்ரக்ருஷ்டம் ப்ரக³ல்ப⁴ம் பரேஶம்
அக²ண்ட³ம் அஜம் பா⁴னுகோடிப்ரகாஶம் ।
த்ரய:ஶூலநிர்மூலனம் ஶூலபாணிம்
ப⁴ஜே(அ)ஹம் ப⁴வானீபதிம் பா⁴வக³ம்யம் ॥ 5 ॥

5. பேராற்றலுடையவரும், பரமேசுவரரும், முழுமையானவரும், பிறப்பற்றவரும், கோடிசூர்யப் பிரகாசம் உடையவரும், (ஆணவம், கன்மம், மாயை) என்ற மூன்று வகையான விலங்குகளை உடைத்தெறிபவரும், முத்தலைச் சூலத்தையேந்திய திருக்கரத்தையுடையவரும், மெய்யன்புடைமையால் அடையக்கூடியவரும், பவானீ தேவியின் கணவருமான பெருமானைப் போற்றி வணங்குகின்றேன்.

कलातीत कल्याण कल्पान्तकारी
सदा सज्जनानन्ददाता पुरारी ।
चिदानन्दसन्दोह मोहापहारी
प्रसीद प्रसीद प्रभो मन्मथारी ॥ ६ ॥

கலாதீத கல்யாண கல்பாந்தகாரீ
ஸதா³ ஸஜ்ஜனானந்த³தா³தா புராரீ ।
சிதா³னந்த³ஸந்தோ³ஹ மோஹாபஹாரீ
ப்ரஸீத³ ப்ரஸீத³ ப்ரபோ⁴ மன்மதா²ரீ ॥ 6 ॥

6. கலைகளுக்கு அப்பாற்பட்டவரும், மங்கள வடிவினரும், கல்பங்களுக்கு முடிவை (பிரளயத்தை)ச்செய்பவரும், எப்பொழுதும் ஸாதுக்களுக்கு ஆனந்தத்தையளிப்பவரும், முப்புரங்களை அழித்தவரும், சச்சிதானந்தஸ்வரூபரும், அஞ்ஞானத்தை அகற்றுபவரும், மன்மதனை எரித்தவருமான பிரபுவே, (எங்களிடம்) மகிழ்ச்சியுடன் அருள்புரிவீராக, மகிழ்ச்சியுடன் அருள்புரிவீராக.

न यावद् उमानाथ पादारविन्दं
भजन्तीह लोके परे वा नराणाम् ।
न तावत् सुखं शान्ति सन्तापनाशं
प्रसीद प्रभो सर्वभूताधिवास ॥ ७ ॥

**ந யாவத்³ உமாநாத² பாதா³ரவிந்த³ம்**
**ப⁴ஜந்தீஹ லோகே பரே வா நராணாம் ।**
**ந தாவத் ஸுக²ம் ஶாந்தி ஸந்தாபநாஶம்**
**ப்ரஸீத³ ப்ரபோ⁴ ஸர்வபூ⁴தாதி⁴வாஸ ॥ 7 ॥**

7. உமாநாதனே! எதுவரையில் உமது திருவடித்தாமரைகளை மக்கள் தொழவில்லையோ, அதுவரையில் இந்த உலகத்திலோ அல்லது பரலோகத்திலோ அவர்கள் சுகத்தையோ அமைதியையோ அல்லது துக்கநாசத்தையோ அடையமாட்டார்கள். அனைத்து உயிர்களின் ஹ்ருதயங்களில் வாஸம் செய்யும் பிரபுவே! எங்கட்கு அருள் செய்வீராக.

**न जानामि योगं जपं नैव पूजां**
**नतोऽहं सदा सर्वदा शम्भु तुभ्यम् ।**
**जराजन्मदुःखौघतातप्यमानं**
**प्रभो पाहि आपन्नं मामीश शम्भो ॥ ८ ॥**

**ந ஜாநாமி யோக³ம் ஜபம் நைவ பூஜாம்**
**நதோ(அ)ஹம் ஸதா³ ஸர்வதா³ ஶம்பு⁴ துப்⁴யம் ।**
**ஜராஜன்மது³:கௌ²க⁴தாதப்யமானம்**
**ப்ரபோ⁴ பாஹி ஆபன்னம் மாமீஶ ஶம்போ⁴ ॥ 8 ॥**

8. நான் யோகம் அறியேன்; ஜபம் பூஜை இவைகளையும் நானறியேன். எப்பொழுதும் சம்புவான உம்மையே நமஸ்காரம் செய்கிறேன். பிரபோ, சம்போ, ஈசா, முதுமை - பிறப்பு (இறப்பு) ஆகிய துன்பங்களால் வெந்து தவித்துக் கொண்டிருக்கும் துக்கமடைந்தவனான என்னை (அவைகளினின்றும்) காப்பாற்றியருள்வீராக.

**रुद्राष्टकमिदं प्रोक्तं विप्रेण हरतुष्टये ।**
**ये पठन्ति नरा भक्त्या तेषां शम्भुः प्रसीदति ॥**

**ருத்³ராஷ்டகமித³ம் ப்ரோக்தம் விப்ரேண ஹரதுஷ்டயே ।**
**யே பட²ந்தி நரா ப⁴க்த்யா தேஷாம் ஶம்பு⁴: ப்ரஸீத³தி ॥**

9. சிவபெருமானின் திருப்திக்காக பிராமணர் மூலமாகக் கூறப்பட்ட இந்த ருத்ராஷ்டகம் என்ற ஸ்தோத்ரத்தை எவர்கள் பக்தியுடன் படிக்கின்றார்களோ அவர்களிடம் சம்புவான பரமேசுவரன் மகிழ்ச்சியடைகின்றார்.

இவ்வாறு துளசி தாஸர் இயற்றிய **ராமசரித மானஸ்** என்ற ஹிந்தி ராமாயணத்தில் உத்தர காண்டத்தில் உள்ள **ஸ்ரீ ருத்ராஷ்டகம்** என்னும் சிவஸ்துதி தமிழ் உரையுடன் முற்றிற்று.

**சிவம்.**